# SAVUKKADI DURBAR

[IN TAMIL]



MADURAI UNIVERSITY LIBRARY
8 MAY 1971
MADURAI - 2


By

NARA NACHIAPPAN



Book supplied by the Madurai University Central Co-op. Stores, Madurai-2.

KALAI PRASURAM

EXTENSION P. O. — DEVAKOTTAI

அண்ணாதுரை: [illegible]

## பதிப்புரை

என்னருமைத் தமிழ்நாட்டுத் தம்பி தங்கைகளே! வணக்கம்.

கலைப் பிரசுரத்தின் பதின்மூன்றாவது வெளியீடாகச் “சவுக்கடி தர்பார்” என்னும் இந்நூலை உங்கள் முன் வைக்கிறோம். தோழர் நாரா நாச்சியப்பன் எழுதியுள்ள கதைகள் பலவற்றை முன்னமேயே படித்திருக்கிறீர்கள். இக்கதையையும் படித்துப் பார்த்து உங்கள் கருத்தை எழுதுங்கள்.

உங்கள் அன்புள்ள,

“அருவி”


MADURAI UNIVERSITY LIBRARY.
MADURAI-2.

# 1. பயங்கரப் படகோட்டி

ஒருநாள் அந்திப் பொழுது. காவிரிப்பூம்பட்டினத்துக் கடற்கரை மிக அழகாக விளங்கியது. அலையலையாகக் கடல் அனுப்பும் மடிப்புக்களும், வானத்தின் சிவந்த ஒளியும் பார்க்கப் பார்க்க இனிமையாக இருந்தன.

அந்தக் கடற்கரையிலே மீன் பிடிக்கும் செம்படவர்களும், படகோட்டிகளும் குடிசை கட்டிக்கொண்டிருந்தார்கள். கடற்கரையின் அழகைக் கொஞ்சம் குறைப்பதாக இருந்தன அந்தக் குடிசைகள்.

அந்த அந்தி வானத்தின் அழகைப் பருகிக் கொண்டே, சோழநாட்டு அமைச்சர் அம்பலவாணர் கடற்கரையில் உலாவிக் கொண்டிருந்தார். அவர் கையைப் பிடித்தபடி ஏழு வயதுச்சிறுவனை வேலநாதன் நடந்து கொண்டிருந்தான். வேலநாதனுக்குக் கடலில் படகில் செல்ல வேண்டும் என்று ஆசை யுண்டாகிற்று. அமைச்சர் அம்பலவாணரை நோக்கி, "அப்பா, படகில் போவோமா?" என்று கேட்டான். தன் அருமை மகனின் ஆசையை அவர் மறுக்கவில்லை. பக்கத்திலிருந்த வீரர்களை நோக்கி அவர் படகொன்று அமர்த்தி வரும்படி ஆணையிட்டார். சிட்டுப் பறப்பதுபோல் அந்த இரு சிப்பாய்களும் படகுகளை நோக்கிப் பறந்து ஓடினார்கள். அவர்கள் அருகில் வந்ததும், "ஐயா, என் படகு வேண்டுமா? என் படகு வேண்டுமா?" என்று படகோட்டிகள் கேட்டுக் குவிந்து விட்டார்கள் கடைசியாக நல்ல படகொன்றைப் பேசி முடித்துக்கொண்டு அமைச்சரிடம்

வந்தார்கள். அம்பலவாணரும் வேலநாதனும் போய் அந்தப் படகில் ஏறிக்கொண்டார்கள்.

அந்தப் படகோட்டி, படகை மிக அழகாக வைத்திருந்தான். செல்வச் சீமான்கள் வந்தால் அலட்சியப்படுத்தாதபடி அதை அழகாக வைத்திருந்தான். படகின் உட்புறத்தில் சுற்றிலும வண்ணம் பூசி, இடையிடையே அழகிய சித்திரங்கள் தீட்டப்பெற்றிருந்தன. படகின் மேல் உட்காரும் இடத்தில் அழகிய ரத்தினக் கமபளம விரிக்கப்பட்டிருந்தது. அதன் மத்தியில் ஒரு வெளளித் தட்டில் வெற்றிலை, பாக்கு, சிவப்புச் சுண்ணும்பு, காசுக்கட்டி ஏலம், கிராம்பு ஒவ்வொன்றும் தனித்தனி வெள்ளிக் கிண்ணத்தில் வைக்கப்பட்டிருநதன. அமைச்சர் அம்பலவாணர் மிக்க மகிழ்ச்சியுடன் படகில் உட்கார்ந்து வெற்றிலை போடத் தொடங்கினர். படகோட்டியை மிகவும் மெச்சினர். படகு காற்றில் மிதப்பது போல் அசைந்தசைந்து கரையை விட்டு நீங்கிப் போய்க்கொண்டிருந்தது.

வேலநாதன் சுற்றிலும் விரிந்து விளங்கும் செவ்வானத்தின அடிப்பரப்பின அழகையும், படகில் தீட்டப்பெற்றிருந்த அந்த வண்ண ஓவியங்களையும் கண்டு கண்டு களித்துக்கொண்டிருந்தான். சில்லென்று வீசும் கடற்காற்று அவன் தலை மயிர்களை ஆட்டிக்கொண்டு சென்றது. படகு கடலுக்குள் போய்க்கொண்டேயிருந்தது.

படகைக் கரைக்குத் திருப்பாமல் அதன் போக்கில் விட்டுக் கொண்டிருந்தான படகுக்காரன். மாலை நேரம் போய் இரவு நெருங்கிக் கொண்டே யிருந்தது. அதைக் கவனித்த அம்பலவாணர் படகைக் கரைப்பக்கம் திருப்பச் சொன்னர். படகுக்காரன் ஏதோ ஒரு பக்கம் திருப்பிஞன். படகு மீண்டும கடலுச்குள்ளேயே போய்க் கொண்டிருந்தது. இரவு சூழ்ந்து விட்டது. இன்னும் கரை சேர்ந்த பாடில்லை. படகில், படகோட்டி, அமைச்சர் அம்பலவாணர் அவர் மகன் வேலநாதன் மூன்றுபேருமே இருககினறனா. கூட வந்த வீரர்களோ கடற்கரையிலேயே நின்றுவிட்டனர். படகோட்டி கொஞ்சங்கூட வருத்தமில்லாமல் துடுப்பைத தள்ளிக் கொண்டே பாடினன். அவன் பாட்டு சுடுகாட்டில் நரி ஊளையிடுவதைப்போல்

அருவருப்பாக இருந்தது. அம்பலவாணரால் இதைப் பொறுக்க முடியவில்லை. "டே, பாட்டை நிறுத்தடா" என்று சினந்து கூறினர். படகோட்டி இதைக் கேட்காதது போலப் பாடிக்கொண்டே யிருந்தான். அவருக்குச் சினம் பெருகி விட்டது. எழுந்து போய் ஓங்கி ஒரு அறை வைத்தார். படகோட்டி அழுதுகொண்டே மறுபடியும் பாடத்தொடங்கினன். அமைசசருக்கு இந்தப் புரியாதவனேடு என்ன செய்வதென்றே புரியவில்லை. "டே, படகை எங்கே கொண்டுபோகிருய்?" என்று அதட்டினர். அவன் அதைப் பொருட்படுத்தாமல் அழுகையுடன் பாடிக்கொண்டிருந்தான். இவனேடு என்ன செய்வதென்று தெரியாமல் அமைச்சர் அலுத்துப் போய்விட்டார். படகு எந்தத் திசையிலோ போய்க்கொண்டிருந்தது. இருள் சூழச் சூழக் கடல் அலைகள் பேரோசை யெழுப்பிக்கொண்டிருந்தன. மாலை நேரத்தில் அழகாக விளங்கிய அதே கடல் இப்பொழுது பயங்கரமாகத் தோன்றியது. கடல் அலைகளின் பயங்கரமான ஓசையும், படகோட்டியின் அழுகைப் பாட்டும் பயத்தை அதிகப் படுத்தின. ஏழு வயதுச் சிறுவனை வேலநாதன் பயந்து கண்களை மூடிக் கொண்டான். அப்பாவின் கையைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டான். அம்பலவாணருக்கு நேரம் ஆக ஆகப் படகோட்டியின் மீது சந்தேகம் உண்டாகியது. எங்கோ நம்மை இழுத்துச் செல்லச் சூழ்ச்சி செய்கிருன் என்று தோன்றியது. மறுபடியும் கோபத்துடன் படகோட்டியின் அருகில் எழுந்து சென்ருர்.

"டே, வாயைத் திறந்து சொல்! இல்லாவிட்டால் ஒரே உதையில் கடலுக்குள் விழுந்து சாவாய்! எங்கே போகிருய்?" என்று கேட்டார். அவன் இவரை ஒரு முறை முறைத்துப் பார்த்து விட்டுப் பாடிக் கொண்டிருந்தான். அம்பலவாணர் மீசை கோபத்தால் துடித்தது. இடுப்பில் இருந்த உடைவாளைக் கழற்றினர். படகோட்டியைப் பார்த்து ஓங்கியபடி, "டே, வாயைத் திறக்கிருயா? இல்லையா?" என்று இரைந்து கேட்டார். மேகங்களுக்கு இடையில் மறைந்திருந்த நிலவு வெளிக்கிளம்பியது. அதன் ஒளி பட்டு வாள் பளிச்சென்று மின்னியது. படகோட்டி இதற்கும் பயப்படவில்லை. அவர் "வாயைத்

திறக்கிறாயா? இல்லையா?" என்று கேட்டதும், வாயைத் திறந்தபடி "ஆ! ஆ!" வென்று சிரித்தான். அது மிகப் பயங்கரமாக இருந்தது. சிறுவன் வேலநாதன் கண்கள் இரண்டையும், இரண்டு கைகளாலும் மூடிக்கொண்டான். அம்பலவாணர் என்ன செய்வதென்று புரியாமல் படகில் இங்குமங்கும் உலாவிக் கொண்டிருந்தார். அந்தப் பாழாய்ப் போன படகோட்டியோ இன்னும் பாடிக்கொண்டிருந்தான். அவன் பதில் சொல்லா விட்டாலும் பாடாமல் இருந்தால் போதும் என்றாகி விட்டது. அம்பலவாணருக்குப் படகோட்டியின் மேல் எழுந்த கோபம் பொங்கிக் கொண்டிருந்தது. அவனை ஒரே வீச்சில் சாய்க்க வேண்டுமென்று நினைத்தார். வாளை ஓங்கியபடி அவனை நோக்கிப் பாய்ந்தார். இரண்டடி எடுத்து வைத்திருக்க மாட்டார். அதற்குள் தூரத்தில் ஒரு தீவட்டி வெளிச்சம் தெரிந்தது. அதைப் பார்த்தபடி நின்றுகொண்டிருந்தார். அது காவிரிப்பூம்பட்டினத்துக் கடற்கரையா, வேறுகரையா என்பது ஒன்றும் சரியாகப் புரியவில்லை. அதையே உற்றுப்பார்த்துக் கொண்டிருந்தார் அம்பலவாணர். வேலநாதனோ குப்புறப் படுத்தபடி தூங்கிக்கொண்டிருந்தான்.



## 2. பட்டினி மண்டபம்

படகு கரையை நெருங்க நெருங்க அலைகள் பலமாக அடித்தன. படகு மேலும் கீழும் ஏறி இறங்கி ஆடிய ஆட்டம் பயங்கரமாயிருந்தது படகோட்டியோ பாடிக் கொண்டிருந்ததை நிறுத்த வில்லை. வேலநாதன் உறக்கத்திலிருந்து விழித்துக் கொண்டான். கரையையே பார்த்துக் கொண்டு அப்பாவின் கையை ஓடிப் போய்ப் பிடித்துக் கொண்டான். அவ்வளவு பயமாக இருந்தது அவனுக்கு. அம்பலவாணர் அதை யொன்றும் கவனிக்க வில்லை.

கரை நெருங்க நெருங்க அது வேருெரு நாடு என்பது புரிந்தது. படகு கரை சேரும் போது காலை மலர்ந்தது. கதிரவன் கதிர்கள் எங்கும பரவின. அந்தப் பயங்கரப் படகோட்டி படகைக் கரையில் சேர்த்து விட்டு அம்பல வாணரை நோக்கி இறங்கச் சொல்லிக் கைகாட்டினுன். அம்பலவாணரோ ஒன்றும் புரியாதவர் போல் நின்று கொண்டிருந்தார். அப்பொழுது படகோட்டி கை தட்டினுன். மரங்களுக் கிடையிலிருந்து நான்குபேர் ஓடிவந்தனர். சற்று நேரத்திற்குப் பிறகு, நாகரிகமாக உடையணிந்த ஒரு மனிதன் வந்து கொண்டிருந்தான். ஓடி வந்த நான்கு பேரும், நல்ல முரட்டு ஆசாமிகளா யிருந்தார்கள். ஆனல் அவர்களைப் பார்த்தால் பரிதாபமாக இருந்தது. யாருக்கோ அடங்கி நடப்பவர்கள் போல் காணப்பட்டார்கள். அவர்கள் படகில் ஏறி அமைச்சர் அம்பலவாணரையும், வேலநாதனையும் தூக்க முயற்சி

செய்தார்கள். அதற்குள் அம்பலவாணர் "ஒன்றும் செய்யாதீர்கள். நானே வருகிறேன்" என்று சொல்லி விட்டுக் கீழே இறங்கிக் கரையில் நடந்தார். அதற்குள் தூரத்தில் வந்த அந்த நாகரிக மனிதன் கரையருகில் வந்து விட்டான். அவன் தூய்மையான வெள்ளை வேட்டியொன்றைப் பஞ்சக்கச்சம் வைத்துக் கட்டிக் கொண்டிருந்தான். மேலில் ஒரு துண்டு போர்த்துக் கொண்டிருந்தான். தலைப்பாகையும், காலில் செருப்பும் அணிந்திருந்தான்.

அம்பலவாணர் அந்த முரட்டு ஆசாமிகளின் நடுவில் நடந்து சென்றார். அவர்கள் அந்த நாகரிக மனிதனின் முன்வந்து நின்று தலை குனிந்து வணங்கினர். அந்தப் படகோட்டியும் அவர் முன்வந்து வணங்கினான். அந்த மனிதனோ மிகவும் ஒல்லியாகக் காற்றடித்தால் விழுந்து விடும் அளவு எலும்பனாக இருந்தான். அவனுக்கு இவர்கள் அனைவரும் வணக்கம் செலுத்தியது அம்பலவாணருக்கு வியப்பாக இருந்தது. வேலநாதனுக்கோ இவையொன்றும் புரியவில்லை.

அந்த மனிதன் படகோட்டியை அருகில் அழைத்தான். அவன் கையில் ஒரு மோதிரத்தையும், ஓலையொன்றையும் கொடுத்தான். ஓலையில் ஏதோ எழுதியிருந்தது. அவற்றை வாங்கிக் கொண்டு மறுபடியும் வணக்கம் செலுத்தி விட்டுப் படகோட்டி சென்று விட்டான்.

அந்த மனிதனை ஏதோ கேட்பதற்காக அம்பலவாணர், "ஐயா" என்று வாயைத் திறந்தார். அதற்குள் அந்த முரடர்களில் ஒருவன் அவர் வாயைப் பொத்தினான். அவன் ஏதோ சைகை காட்டியவுடன், அம்பலவாணரை வேறொரு இடத்திற்குக் கடத்திச் சென்றனர்.

அவ்வளவு காரியமும் ஒரு பேச்சுக்கூட இல்லாமல் நடந்து முடிந்தன. இந்த விசித்திரமான நாட்டில் இன்னும் என்னென்ன நடக்குமோ என்று அம்பலவாணர் திகைப்படைந்தார். அங்கே போனதும் ஒரு மண்டபத்தில் அவர்கள் இருவரையும் அடைத்து வைத்தார்கள். அந்த மண்டபத்தில் ஒரு மூலையில் தண்ணீர்ப் பானை

ஒன்று இருந்தது, வேறு ஒன்றும் இல்லை. அங்கே அடைத்து விட்டு அந்த நான்கு முரடர்களும் அகன்று விட்டார்கள்.

இப்படியே அந்த மண்டபத்திற்குள் மூன்று நாட்கள் யாரும் வரவில்லை. தின்பதற்குக்கூட ஒருவரும் ஒன்றும் கொண்டுவரவில்லை மூன்று நாட்களும் பசியோடு அம்பலவாணரும வேலநாதனும் பட்டினி கிடந்தனர். அவர்களுக்குத் துக்கமாக இருந்தது. எதற்கும வழியில்லை.



# 3. சாப்பாட்டுத் தொழுவம்

மூன்றாவது நாள் காலையில் யாரோ ஒருவன் பலகணி வழியாக மண்டபத்துக்குள் எட்டிப் பார்த்தான். யார் என்று பார்ப்பதற்காக அம்பலவாணர் எழுந்து நடந்தார். வேலநாதனும் அவர் பின்னாகவே நடந்தான். அந்த இருட்டு மண்டபத்திற்குள் அப்பாவை விட்டுப் பிரிந்திருக்க அந்தச் சிறுவனால் எப்படி முடியும்? இவர்கள் எட்டடி நடந்திருப்பார்கள். அதற்குள் அந்தத் தலை மறைந்து விட்டது. பிறகு இருவரும் திரும்பி வந்து முன் உட்கார்ந்திருந்த இடத்திலேயே வந்து அமர்ந்தார்கள். வேலநாதனுக்கு அந்தக் கடற் பயணத்தையும், இந்த இருட்டு மண்டபத்தையும் நினைக்க நினைக்க என்னவோ செய்வது போலிருந்தது. இவ்வளவிற்கும் தான்தான் காரணம் என்று எண்ணும் பொழுது அவன் மனம் மிகவும் வருந்தியது. தான படகில் செல்ல வேண்டுமென்று கேட்டதால்தானே இங்கு வரவேண்டியிருந்தது. தனக்காக அப்பாவும் சேர்ந்து படும் துன்பம் அவனால் பொறுக்க முடியவில்லை. இப்படி எல்லாம் வருந்திக் கொண்டிருக்கும் பொழுது அந்த மண்டபத்தின் கதவு திறந்தது. உள்ளே முன் வந்த நான்கு பேரில் ஒருவன் வந்தான். அருகில் வந்தவுடன் இருவரையும் வெளியில் கூட்டி வந்தான். அங்கே முன்பார்த்த அந்த நாகரிக மனிதனும் இன்னொருவனும் நின்று கொண்டிருந்தனர். அந்தக் கூட இருந்த மனிதன் அம்பலவாணரையும் வேலநாதனையும் கைபிடித்து நாடிபார்த்தான்; பிறகு, ஏதோ சைகை காட்டினான். உடனே அந்த நாகரிக மனி

தன் இவர்களைக் கூட்டிவந்த அந்த முரட்டாசாமிக்கு ஏதோ சைகை காட்டினான். அவன் அம்பலவாணரையும் வேலநாதனையும் தன் பின்னால் வரும்படி கூறிவிட்டு நடந்தான்.

ஒரு கூரையிடப்பட்ட இடத்திற்கு வந்தார்கள். இது மாட்டுத் தொழுவம் போல் இருந்தது. மிக ஆபாச மாகவும் இருந்தது. அந்த இடத்தில் அம்பலவாணரை யும் வேலநாதனையும் உட்காரும்படி சைகை காட்டினான். அவர்கள் இருவரும் உட்கார்ந்தார்கள். அதே நேரத்தில் கோயில் மணிபோல் டிங்டாங் டிங்டாங் என்ற மணி யொலி கேட்டது. தடதட வென்று பலபேர் உள்ளே நுழைந்தனர். வரிசையாகக் குந்திக் கொண்டனர். அனைவரும் உட்கார்ந்து விட்டனர். வேலநாதன் அவர் களை எல்லாம் வியப்போடு பார்த்தான். அத்தனை பேரும் குண்டு குண்டு ஆசாமிகளாய் இருந்தார்கள். அவர்கள் ஒவ்வொருவர் உடலிலும் வடுக்களும், காயங்களுமாக இருந்தன. அவர்களைப் பார்க்கப் பார்க்கப் பரிதாபமாக இருந்தது. அவர்களுக்கோ வேலநாதனையும் அம்பல வாணரையும் புதிதாகப் பார்த்ததால் இவர்கள் மீது பரி தாப உணர்ச்சி ஏற்பட்டது. எல்லோருடைய கண்களும் மிகப் பரிதாபமாக இந்தப் புதிய ஆட்களைப் பார்த்தன.

எல்லோரும் உட்கார்ந்த பிறகு, எல்லோருக்கும் ஒவ் வொரு மங்குத் தட்டு வைக்கப்பட்டது. அத்தட்டின் அழுக்கு நிறம் பார்ப்பதற்கே அருவருப்பாயிருந்தது. அதில் ஏதோ ஓர் வகைக் கூழை ஒரு முரட்டு ஆசாமி ஊற்றிக்கொண்டு போனான். அவனுக்கும் மற்றவர்களைப் போலவே உடலில் காயங்களும் வடுக்களும் இருந்தன எல்லோரும் அந்தக் கூழைக் குடித்தார்கள். பசியாக இருந்ததால் சிறிதளவே அந்தக் கூழை அம்பலவாணர் குடித்தார். வேலநாதனுக்கு அதைக் குடிப்பதா என்றே பலத்த யோசனையாக இருந்தது. இருந்தாலும் பசியின் கொடுமையால் சிறிதளவு அதைக் குடித்தான்.

# 4 அடிமை வேலை

எல்லோரும் கூழ் குடித்த பிறகு தட்டைக் கழுவி வைத்து விட்டுச் சென்றார்கள். அம்பலவாணரையும் வேலநாதனையும கூட்டி வந்த ஆசாமி மீண்டும் அவர்களை நடத்திச் சென்றான். கடைசியில் ஒரு இடத்திற்கு வந்தார்கள். அங்கே பலபேர் மரம் அறுத்துக் கொண்டும, பலா வேலைகள் செய்து கொண்டும் இருந்தார்கள். இவர்கள் அங்கே போனதும் சிலபேர் இவர்கள் பக்கம் திரும்பிப் பார்த்தார்கள். பளார் என்று அவர்களின முதுகில் அடிவிழுந்தது. கூட்டிவந்த ஆசாமி "இங்கே வேலை பாருங்கள்" என்று கூறிவிட்டுச் சென்றான். சவுக்குடன் நின்று கொண்டிருந்த ஒரு நாகரிகமான மனிதன் "ஏய் அடிமை, அதோ அந்த மரத்தை விறகுக்கான வகையில் வெட்டு" என்று உறுமினான். அம்பலவாணர் அங்கே கிடந்த ஒரு மரத்துண்டை நோக்கிப் போனார்- அங்கே வெட்டுவதற்கு ஒன்றும் இல்லை. திரும்பித் திரும்பிப் பார்த்தார். திடீரென்று அவர் முதுகில் ஒரு அடி விழுந்தது. "என்னடா விழிக்கிறாய்? வெட்டுவதற்காக ஒன்றும் வாங்காமல் ஏன் வந்தாய்? போ, அதோ இருக்கும கோடாலியை எடுத்து வா!" என்று உறுமியபடி அந்த நாகரிக மனிதன் தன் சவுக்கால் மற்றொன்று வைத்தான். இந்தக் கோரக் காட்சியைக் கண்ட வேலநாதன் 'அப்பா!' என்று அலறிவிட்டான். அவனை நோக்கி ஓடி வந்த அம்மனிதன் "வாயை மூடடா சிற்றடிமை" என்றபடி அவன் முதுகில் ஒரு தடவை சவுக்கைச் சுழற்றி அடித்தான். பீறிக் கொண்டு வரும் அழுகையைக்

கையால் வாயைப் பொத்தியபடி வேலநாதன் அடக்கிக் கொண்டான். அம்பலவாணர் இக்காட்சியைக் கண்டு கண் கலங்கினார். வேறென்ன செய்ய முடியும்?

அன்று முழுவதும் அவர் விறகுடைத்துக் கொண்டிருந்தார். முன்பின் இவ்வளவு கடிய வேலைகளைச் செய்ததில்லை யாகையால் அவர் கைகள் இரத்தம்போல் சிவந்து விட்டன. அவர் சிறிது நேரம் ஓய்வெடுத்துக் கொள்ள வேண்டுமென்று திரும்பிய போதெல்லாம், அவர் மீது சவுக்கடி விழுந்து கொண்டே யிருந்தது. அத்தனையையும் பொறுத்துக கொண்டு அன்று பொழுது சாயும் வரை விறகுடைத்தார்.

வேலநாதனையோ பலகைகளை யடுக்கும்படியும், வெட்டப்பட்ட விறகுகளை ஒன்ருகக் குவிக்கும்படியும் ஆணையிட்டுக் கொண்டிருந்தான் அந்தச் சவுக்குக்கார மனிதன். அவனுக்கு ஓடி ஓடிக் களைத்து விட்டது. சோர்ந்து உட்காரும் போதெல்லாம் சவுக்கடி விழுந்து கொண்டே யிருந்தது.

சோழ நாட்டு அரசகுமாரனுடன் அரண்மனையில் விளையாடியதையும், இப்பொழுது எடுபிடியாக அலைவதையும் எண்ண எண்ண அவனுக்குக் கண்ணீர் பெருகியது.

கடைசியாகப் பொழுது சாய்ந்து இருட்டிய பிறகு ஒருமணி யடித்தது. எல்லா அடிமைகளும் சாப்பாட்டுத் தொழுவத்தை நோக்கி நடந்தார்கள் அப்பாவும் மகனும் அவர்கள் பின்னே ய சென்ருர்கள். அந்தக் கூழைக் குடித்து விட்டு வெளியில் வந்தார்கள். "அண்ணே என்னோடு வாருங்கள். பேசிக்கொண்டே தூங்கலாம்" என்று ஒரு பெரிய அடிமை அம்பலவாணரை நோக்கிக் கூப்பிட்டான்.



# 5. வீரன் வெள்ளிமலை

அந்தப் பெரிய அடிமையின் அன்பான பேச்சு, அம்பலவாணருக்கு நம்பிக்கையளித்தது. ஏதோ திக்குத் தெரியாத காட்டில் ஒரு துணை கிடைத்ததே என்று அவர் மிகுந்த மகிழ்ச்சியடைந்தார். அந்த அடிமையின் பின் வேலநாதனுடன் நடந்தார். அவர்கள் ஒரு சிறு மலையடிவாரத்திற்கு வந்தார்கள். ஒரு மலைக் குகைவு மனிதர்கள் வசிக்கத் தகுந்தபடி ஒரு சிறு குடிசை போல் இருந்தது. அதில் ஒரு சிறு பாயும், தலைக்கு வைத்துக்கொள்ளக் கல்லும் இருந்தன. நல்ல வேளையாக அன்று நிலவு இருந்ததால் குகை இருளடையவில்லை. இல்லாவிட்டால் அது பயங்கரமாகத் தோற்றமளித்திருக்கும்.

அங்கே போய்க் கல்லொன்றின் மேல் உட்கார்ந்தவுடன் "அப்பா, இது என்ன நாடு? இங்கு ஏன் இப்படிச் சித்திரவதை செய்கிறார்கள்?" என்று அம்பலவாணர் கேட்டார்.

"அடிமைத் தீவு என்று இதற்குப் பெயர். பல நாட்டு மக்களையும் எப்படியாவது இங்கு கொண்டு வந்து அடிமை வேலைகளில் பழக்குகிறார்கள். நன்றாக அடிமைத்தனம் ஊறிப்போன பிறகு மேல் நாடுகளில் கொண்டுபோய் விற்று விடுகிறார்கள்." என்று அந்த அடிமை கூறினான்.

"என்ன, ஆடுமாடுகளை விற்பதுபோல் மனிதர்களை விற்கிருர்களா? என்ன அநாகரிகமான பழக்கம்?" என்று அம்பலவாணர் கேட்டார்.

"நானும் இப்படித்தான் முதலில் நினைத்தேன். என்ன செய்வது? இந்தப் பழக்கம் மேல் நாடுகளில் இருக்கிறது. அங்கெல்லாம் காட்டுமிராண்டித்தனம் ஆட்சி செய்கிறது. பணம் கிடைக்கிறது என்பதற்காக இந்தப் பாதகர்கள் இந்த வியாபாரத்தை நடத்து கிருர்கள். இவர்கள் வியாசர்கள் என்ற இனத்தைச் சேர்ந்தவர்கள். மேலை நாடுகளிலிருந்து பரவியவர்கள். மேலை நாடுகளுக்கும், தமிழகத்திற்கும இடையில் இருக்கும் இந்தத் தீவில் குடியேறினர்கள். இங்குள்ள பூர்வீகக் குடிகள் பெரும் முரடர்கள். இருந்தாலும் வியாசர்களின் கத்தியும் சவுக்கும் குடிகளை அடக்கி அடிமையாக்கி விட்டன. வியாசர்கள் தமிழர்களைத் தந்திரமாக இங்கே கொண்டுவந்து அடிமைகளாக்கி மேல் நாட்டாருக்கு விற்று விடுகிருர்கள். இதுதான் இந்தத் தீவைப் பற்றிய கதை. ஆமாம், தாங்கள் யார்? எப்படி இவர்களிடம் சிக்கினீர்கள்?" என்று அந்த அடிமை கேட்டான்.

"அப்பா, நான் சோழநாட்டு அமைச்சன் அம்பலவாணன் என்று சொல்ல நாக் கூசுகின்றது. நான வாழ்ந்த வீர வாழ்வையும் இப்பொழுது இருக்கும அடிமை நிலையையும் எண்ண எண்ண உள்ளம கொந்தளிக்கின்றது" என்று அழ மாட்டாத குறையாகச் சொன்னுர்.

"ஆ, தாங்கள் அம்பலவாணரா? என்னருமைச் சேனுதிபதியா?" என்று கேட்டபடி அவரை அந்த அடிமை தழுவிக் கொண்டான். அம்பலவாணர் அவன் முகத்தை நிமிர்த்திப் பார்த்தார். "ஆ, வெள்ளிமலை! என் அருமை வீரா! உன்னை இந்தக் கோலத்தில் பார்த்ததால் என்னுல் புரிந்துகொள்ள முடியவில்லை. இமயத்தை வென்ற போரிலே என்னைக் காப்பாற்றிஞய். வங்கப் போரிலே நீ மாண்டாயென்று நினைத்து உனக்கு நினைவுக்கல் நாட்டினேம். நீ உயிருடன் இருக்

கிருய். என் அருமை நண்பா! வெள்ளிமலை!" என்று கூறியபடி அவனை அம்பலவாணர் தழுவிக் கொண் டார். வேலநாதன் இவர்கள் இருவரையும் மாறிமாறிப் பார்த்துக் கொண்டிருந்தான். அவன் தந்தை அம்பல வாணர் மீண்டும் பேசத் தொடங்கினுர்.

"அப்பா வெள்ளிமலை, வங்கப் போருக்குப் பிறகு சோழ வேந்தர் என்னை அமைச்சனைக் கொண்டார். பெருமையோடு வாழ்ந்தேன். ஒருநாள் படகொன்றில் ஏறிக் கடலில் உலவ எண்ணினேன். படகோட்டி இங்கு கொண்டுவந்து விட்டான். இனி என்ன செய்வ தென்று புரியவில்லை. நீ எப்படி வந்தாய்? அடிமைத் தளையினின்றும் மீள வழியுண்டா?" என்று கேட்டார். வெள்ளிமலை பேசத் தொடங்கினுன். "ஐயா, தங்கள் சேனையோடு வங்கத்தில் போராடிய போது எங்கள் படையை வளைத்துக் கொண்டார்கள் வங்க வீரர்கள். வெகு தீரமாகப் போராடினும். ஆனல் நான் எதிர் பாராத விதமாகப் பின்புறத்தில் வந்த சிலர் என்னைத் தூக்கிக் கொண்டுபோய் என் உடைவாளையும், சட்டைப் பையில் இருந்த பொருள்களையும் பறித்துக்கொண்டு ஒரு மண் குழியில் இறக்கி விட்டர்கள். யாரோ வழிப் போக்கர்களின் உதவியால் குழியை விட்டு வெளியேறி னேன். பல காடுகளையும் கடந்து வங்கக் கடற்கரை யோரம் வந்தேன். அங்கே சில படகுகள் இருந்தன. தமிழகம் செல்லும் படகுகள் உண்டா வென்று கேட் டேன. தமிழறிந்த ஒருவன் 'வாரும்' என்றுன், கையில் பணமில்லை. அங்கு வந்து பெற்றுக்கொள்வாயா என்றுகேட்டேன், சரி என்றுன். பல நாட்களுக்குப்பிறகு படகோ இங்கு வந்து கரை சேர்ந்தது அடிமையா னேன். எனக்கு வழியொன்றும் புலப்படவில்லை. இன்று தங்களைக் கண்டதும், ஏதாவது வழி செய்யவேண்டும் என்று தோன்றுகிறது. விரைவில் சிந்தனை செய் வோம்" என்றுன்.

"இரண்டுபேர் சேர்ந்தால் வழி பிறக்கும், சரி இன்று தூங்குவோம். நேரமாகி விட்டது. நாளைக் காலை யில் பேசிக்கொள்வோம்" என்றுர் அம்பலவாணர்.

அப்பொழுதுதான் வேலநாதனைப் பார்த்த வெள்ளிமலை "இது தங்கள் மகனா? பாவம். சிறு வயதிலேயே இத்தகைய துன்பத்தை அனுபவிக்க வேண்டியிருக்கிறது." என்று சொல்லி வேலநாதனை அணைத்துக்கொண்டான். அந்த அன்பு அணைப்பிலேயே வேலநாதன் தூங்கிவிட்டான். சிறிது நேரத்தில் வெள்ளிமலையும், அம்பலவாணரும் கூடத் தூங்கி விட்டனர். பாதி இரவு வரை பேசிக்கொண்டிருந்து விட்டுத் தூங்கியதால் காலை விடிந்தவுடன் அவர்கள் எழுந்திருக்க வில்லை. அவர்களைத் தேடிக்கொண்டு வந்த சவுக்குக்காரன் இங்கே மூவரும் ஆழ்ந்து தூங்குவதைக் கண்டான்.

"அடிமைப் பயல்களுக்குத் தூக்கம் ஒரு கேடா?" என்று உறுமியபடி அவனுடைய நீண்ட சவுக்கை ஒரு சுழற்றுச் சுழற்றி வளைத்து அடித்தான். அந்த ஒரே அடி அவர்கள் மூவரின் மேலும் பட்டது. திடுக்கிட்டு எழுந்தார்கள். "நாய்களே, நடவுங்கள்" என்று மீண்டும் மீண்டும் சவுக்கால் அடித்தான். மூவரும் தலையைத் தொங்கப்போட்டுக் கொண்டு வேலைசெய்யும் இடத்தை நோக்கி நடந்தனர்.




UNIVERSITY LIBR
MADURAI-2

# 6. அடிமை வாழ்வு

ஒரு மாணவனை ஆசிரியர் அடித்தால், நாம் அவனைப் பார்த்துச் சிரிப்போம. அவனுக்கு அவமானமாக இருக்கும். நல்ல பையனாக இருந்து அடிபட்டால் வருந்துவோம். அடித்துக்கொண்டே இவர்கள் மூவரையும் நடத்திவந்த சவுக்குக்காரனையும், அடிபட்ட இவர்களையும் பார்த்து மற்ற அடிமைகள் சிரிக்கவும் இல்லை. வருந்தவுமில்லை. ஏனெனில் அவர்களுக்குப் பட்டுப்பட்டு பழக்கமாகிப் போய்விட்டது. அடிமைத்தனம் ஊறிப் போய்விட்டது. அவர்களின் வாழ்க்கையையும் தன வாழ்க்கையையும் எண்ணும் பொழுது அம்பலவாணருக்குச் சங்கடமாக இருந்தது. அன்று முழுவதும் அடிபட்டு உழைத்துவிட்டு வெள்ளிமலையுடன் மலைக்குடைவுக்குப் போகப் புறப்பட்டார். அப்பொழுது அந்தச் சவுக்குக்கர்ரன் வந்து வேலநாதனை இழுத்துக்கொண்டு போனான். வேலநாதன் "அப்பா அப்பா!" எனறு கதறினான். தாயைவிட்டு இழுத்துச் செல்லப்படும் கன்றைப்போல ஓவென்று அழுதான். அந்தச் சவுக்குக்காரன் தன் ஒரே ஆயுதமான சவுக்கால் அவனை அடித்து மிரட்டியபடி இழுத்துச் சென்றான். அம்பலவாணர் ஏதோ ஓர் உறுதியுடன் இதைப் பேசாமல் பார்த்துக் கொண்டிருந்தார். அந்த லட்சியமற்ற அடிமைகளின் நடுவிலே ஒரு இலட்சியத்தை விதைக்க எண்ணினார். அதற்கு வெள்ளிமலையுடன் கலந்து ஆலோசிக்க வேண்டுமாகையால், வெள்ளிமலையுடன் வேகமாக நடந்தார். இருவரும்

வெள்ளிமலையின் மலைக் குடைவை அடைந்தனர். அப்பொழுது அம்பலவாணர் பேசத் தொடங்கினர். "வெள்ளிமலை! நாம் இங்கு வந்ததால் ஏதாவது நன்மையாக இருக்க வேண்டும். அடிமையோடு அடிமையாக வாழ்வதில் என்ன பயன் இருக்கிறது? மிருகங்கள் கூட அடிமை வாழ்வை விரும்புவதில்லை. அப்படியிருக்கும் பொழுது இத்தனை மனிதர்கள் ஒரு சில பேருக்கு அடிமையாக இருப்பதென்றால் வாழ்ந்தென்ன பயன? இலட்சியமற்ற வாழ்க்கை ஒரு வாழ்க்கையா? இன்பம் இல்லாமல் வாழ்வதைவிட ஒரு துன்பமும் இன்றி இறப்பது மேலல்லவா? துன்பமடையவே பிறந்தோம் என்று வாழ்வது என்ன வாழ்க்கை? இதை மாற்றியமைக்க வேண்டும். என்ன சொல்கிறாய்?" என்று கேட்டார்.

"ஐயா, நான் எந்தவகையிலும் உங்களோடு முயற்சி செய்கிறேன். அடிமைத் தனத்திலிருந்து மீள விரும்பாத பிறவி உலகில் உண்டா? கூண்டைத் திறந்து விட்டால் கிளி ஓடிப் பறப்பதைக் காணுகிறோம். அப்படியிருக்கும் பொழுது அடிமைகளாயிருந்து துன்பமடைய மனிதன விரும்புவானா? இதற்கு வழி காண்போம!" என்றான்.

"சரி. வேலநாதனை அந்தச் சவுக்குக்காரன் எங்கழைத்துச் செல்லுகிறான் தெரியுமா?" என்று அம்பலவாணர் கேட்டார் "அந்த அடிமை வியாபாரிக்குப் பணிவிடை செய்வதற்காக இருக்கும் அல்லது அவன் மகள் விளையாடுவதற்காக இருக்கலாம்!"

"என்ன, விளையாடப் பையனா?"

"ஆம். முன்னொருமுறை நான் பார்த்திருக்கிறேன். அந்தப் பெண்ணுக்கு அடிமைப் பையன்களைத் துன்புறுத்துவதில் ஆசை அதிகம். அப்பொழுது ஒரு சிறு பையனைக் கால் கை எல்லாவற்றையும் ஒன்றாகக் கட்டித் தரையில் இழுத்து விளையாடிக் கொண்டிருந்தாள். அந்தப் பையனைச் சிறு ஊசியால் குத்தி அவன்

துடிக்கும் போது 'ஆ! ஆ!' வென்று சிரித்துக் குதித்தாள்'' என்று வெள்ளிமலை கூறினான்.

''எனக்குப் பயமாக இருக்கிறது. இருந்தாலும், வேலநாதன் கெட்டிக்காரன். அவன் கிடக்கட்டும். இந்தத் தீவில் அடிமைகளுக்கு மனைவி மக்கள் இல்லையா?''

''ஏன் இல்லை? இருக்கிறார்கள். அவர்களெல்லாம் அந்த அடிமை வியாபாரியின் அரண்மனைத் தோட்டத்துக்குள்ளேயே வேலை செய்து வருகிறார்கள். ஆண் அடிமைகள் பெண் அடிமைகளை மாதம் ஒரு முறைதான் பார்க்க முடியும். அதுவும் ஒவ்வொரு அமாவாசை இரவிலும் தான் பார்க்க முடியும். சில சமயங்களில் பெண்ணடிமை ஒருத்தியை அவளின் கணவனையோ தந்தையையோ கேளாமலே மேல் நாட்டாருக்கு விற்றுவிடுவான் அந்த வியாபாரி. அப்புறம் அந்த அடிமை பெண்டாட்டி இல்லாமலே இருக்க வேண்டியதுதான். இதே போல் பெண்ணடிமைகளும் கணவனை இழந்து நிற்க நேரிடுவதும் உண்டு'' என்று முடித்தான் வெள்ளிமலை.

''விசித்திரமான உலகம்'' என்று பெருமூச்சு விட்டார் அம்பலவாணர்.

''சரி. நாளைக்குப் பேசிக்கொள்வோம். காலையில் கதிரவன் எழுமுன் எழவேண்டும். இல்லாவிட்டால் பெருந்துன்பமாய் முடியும்'' என்று வெள்ளிமலை எச்சரித்தான்.

இருவரும் படுத்து உறங்கத் தொடங்கினார்கள். விருப்பம் போல் தூங்கக்கூட உரிமையில்லாத அடிமைத்தனம் அந்தத் தீவைச் சூழ்ந்தது போல அவர்களைச் சுற்றிலும் அமைதி சூழ்ந்தது. இருள் ஆட்சி செலுத்தியது.

# 7. விளையாட்டு வேதனை

வேலநாதனை ஒரு சவுக்குக்காரன் அழைத்துப் போனானல்லவா? உண்மையில் வெள்ளிமலை சொன்னது போல் அந்த அடிமை வியாபாரியின மகள் விளையாடுவதற்காகத்தான். அந்தப் பெண்ணுக்குப் பனிரெண்டு வயதிருக்கும். அவள் ஒரு ஐந்து வயதுப் பையனை வைத்து ஊசியால் குத்தியும் உருட்டிவிட்டும் வேடிக்கை பார்த்தாள். ஒருநாள் அந்த ஐந்து வயதுப் பாலகனை ஒரு தொட்டித் தண்ணீருக்குள் போட்டு முண்ட விடாமல் அமுக்கினாள். மூச்சுத் திணறுவதைப் பார்க்கப் பார்க்க அவளுக்கு வேடிக்கையாக இருந்தது. பாவம். அந்தப் பையன் தண்ணீருக்குள் மூச்சுவிட முடியாமல் இறந்து போனான். அவனைத் தூக்கிக் கடலில் எறிந்து விட்டு வேறொரு பையனைக் கொண்டு வரும்படி அடிமை வியாபாரி சவுக்குக்காரனிடம் சொன்னான். அவன் எல்லா இடத்தையும பார்த்துவிட்டுச் சிறு பையன்கள் இல்லாததால், பதினைந்து வயதான வேலநாதனை அழைத்துச் சென்றான். அடிமை வியாபாரி அவனைப் பார்த்ததும், "இந்தப் பொம்மை விரைவில் இறவாது, அழைத்துப் போ மகளிடம்" என்றான். சவுக்குக்காரன் வேலநாதனை அழைத்துப்போய் அடிமை வியாபாரியின் மகளிடம் விட்டான். "பாப்பாத்தி, இதோ உனக்குப் புதுப் பொம்மை கொண்டு வந்திருக்கிறேன்" என்று அவனை விட்டுச் சென்றான். நாம் சிறு குழந்தைகளைப் பாப்பா என்று அழைப்பது போல் வியாசர்கள் தங்கள் குழந்தைகளைப பாப்பாத்தி என்று அழைப்பார்கள். இது தெரியாமல்

வேலநாதன், அந்தப் பெண்ணின் பெயர்தான் பாப்பாத்தி என்று நினைத்துக் கொண்டான். அந்தப் பாப்பாத்தி வேலநாதனைப் பார்த்தவுடன்,

சிறிய பொம்மை
செத்தது
பெரிய பொம்மை
கிடைத்தது.

என்று பாடிக் கொண்டே வேலநாதனைக் கையைப் பிடித்துப் பர பர வென்று இழுத்துச் சென்றாள். "இந்தப் பாப்பாத்தி பெரிய ராட்சசியாயிருப்பாளா போலிருக்கிறது. இவளை என்ன பாடு படுத்துகிறேன் என்று இவள் அப்பன் பார்க்கட்டும்" என்று வேலநாதன் மனதிற்குள் உறுதி செய்து கொண்டான்.

பாப்பாத்தி தன் வழக்கம்போல் ஒரு ஊசியை எடுத்துக் கொண்டு வந்தாள். வேலநாதனுக்கு ஊசி ஏனென்பது புரியவில்லை. அந்த ஊசியால் அவன் கையைக் குத்தினாள் 'ஆ!' வென்று அலறித் துடித்தான் வேலநாதன். அவள் அதைக் கண்டு சிரி சிரி யென்று சிரித்தாள். வேலநாதன் பாப்பாத்தியின் குணங்களை இப்பொழுது நன்றாகத் தெரிந்து கொண்டான். மறுபடியும் ஊசியை எடுத்துக் கொண்டு வந்தாள். அப்படியே அவள் கையைப் பிடித்துக் கொண்டு ஊசியைப் பிடுங்கி அவள் கையில் குத்தினான். அவள் 'ஓ ஓ' வென்று பெரும் கூச்சலிட்டாள். சட்டென்று தன் கையால் பாப்பாத்தியின் வாயை மூடினான். பிறகு அவள் வலி அடங்கிய பிறகு, கத்துவதை நிறுத்திய பிறகு கையை எடுத்தான். அவள் கண்டபடி பேசிக் கொண்டு இவன் முதுகில் அடி அடியென்று அடித்தாள். பிறகு என்ன விளையாட்டு விளையாடினாலும் ஊசி விளையாட்டு மட்டும் விளையாடமாட்டாள். வேலநாதனும் அவளுடைய கொடுமையான விளையாட்டுகளைத் தந்திரமாக மாற்றிக் கொண்டு வந்தான். நாள் ஆக ஆக அந்தப் பாப்பாத்தியைத் தன் பொம்மையாக்கிக் கொண்டான். ஒருமுறை குதிரை விளையாட்டு விளையாடுவதற்காக வேலநாதனைத் தவழச் சொல்லி முதுகில்

ஏறிக்கொண்டாள், வாயில் கடிவாளத்தைக் கொடுத்து வேகமாகப் போகும்படி சவுக்கால் அடித்தாள். சிறிது நேரத்திற்குப் பிறகு, வேலநாதன் எழுந்திருந்து "இப பொழுது நீ குதிரையாக இரு" என்று சொன்னான். சரி என்று பாப்பாத்தி குனிந்து கொண்டாள். வேலநாதன் ஜம்மென்று முதுகில் உட்கார்ந்து கொண்டு சவுக்கால் நன்றாக வெளுத்துக் கட்டினான். பாப்பாத்தி அலறினாள். அந்தச் சத்தத்தில் அங்கே ஒரு சவுக்குக்காரன் வந்து விட்டான். அவன் வேலநாதனைக் கண் காது தெரியாமல் அடி அடி என்று அடித்து எச்சரிக்கை செய்து விட்டுப் போனான். பிறகு வேலநாதன் விளையாட்டில் சிறிது எச்சரிக்கையாகவே யிருந்தான். தீமையான விளையாட்டுக்களை வேண்டாமென்று மறுத்துவிட்டுக் கிறுகிறுத்தாம்பாலம், நொண்டி, மாங்கொட்டை முதலிய விளையாட்டுக்களைச் சொல்லிக் கொடுத்தான். ஆனால் பாப்பாத்திக்கு இந்த விளையாட்டுக்கள் பிடிக்கவில்லை. இவை விளையாட்டாகவே அவளுக்குப் படவில்லை. அவள் மறுபடியும் வேலநாதனுக்குத் துன்பம் தரும் விளையாட்டுக்களையே விளையாடத் தொடங்கினாள். வேலநாதனும் காலத்தை எதிர்பார்த்துப் பேசாமல் இருந்தான. யானைக்கொரு காலம் வந்தால் பூனைக்கொரு காலம் வராமலா போகும்?



# 8. சவுக்குக்காரர்கள்

ஒருநாள் இரவானதும் அம்பலவாணரும் வெள்ளிமலையும் மலைக்குடைவை நோக்கிப்புறப்பட்டார்கள். அப்பொழுது அம்பலவாணர் "இந்தத் தீவைப்பற்றிய பூகோள அமைப்பைத் தெரிந்து கொண்டால் நல்லது. நமக்குப் பகலில் நேரமில்லையே. இப்பொழுதாவது சுற்றி வரலாமா?" என்று கேட்டார்.

"வாருங்கள். இப்பொழுது இந்த ஊரை மட்டும் சுற்றி வருவோம். காட்டிற்குள் சுற்றக்கூடாது ஏனெனில் இங்கு புலிகள் நிறைய உண்டு. சில சமயங்களில் புலிகள் ஊருக்குள் வந்து அடிமைகளை அடித்துத் தின்பதும் உண்டு" என்று வெள்ளிமலை கூறினான். "இப்பொழுது இருக்கும் அடிமை நிலையைவிடப் புலிவாழும் கொடிய கானகமும் நல்லதுதான். அதுசரி. இந்தத் தீவின் பரப்பு என்ன தெரியுமா?" என்று அம்பலவாணர் கேட்டார். "ஐந்து கல் சதுரம் இருக்கும். இந்த ஊரிலிருந்து வடக்கில் ஒருகல் தொலைவில் கடல் இருக்கிறது. தெற்கில் நான்கு கல் தொலைவிருக்கும்." என்று வெள்ளிமலை விவரமாகக் கூறினான். அப்பொழுது அவர்கள் சென்ற வழியில் சில அழகிய வீடுகள் தென்பட்டன. அவற்றை நெருங்கினவுடன், வெள்ளிமலை அம்பலவாணரைப் பேசாமல் இருக்குமாறு சொன்னான். அவற்றைக் கடந்ததும் அம்பலவாணர் "இந்த வீடுகள் யாருடையன?" என்று கேட்டார். 'சவுக்குக்காரர்களுடையன" என்று வெள்ளிமலை கூறினான். "சவுக்குக்காரர்கள் யார்?" என்று அம்பல

வாணர் கேட்டார். வெள்ளிமலை விவரமாகச் சொல்லத் தொடங்கினான்.

"இந்தச் சவுக்குக்காரர்களும் வியாசர்கள் தாம். இவ்வியாசர்களின் தலைவன்தான் அந்த அடிமை வியாபாரி. சவுக்குக்காரர்களின் துணையைக் கொண்டுதான் இந்த வியாபாரத்தை அவன் நடத்தி வருகிறான். இந்தச் சவுக்குக்காரர்களுக்குத்தான் உலகத்தில் உள்ள எல்லா நாடுகளும் தெரியும் நாட்டுக்குத்தகுந்த நாகரிகஉடைகளை யணிந்து மனிதர்களைப் படகுகளில் கொண்டு வந்து அடிமைகளாக்கி விற்பார்கள். சில சவுக்குக்காரர்கள் படகோட்டிகளாக வேலை பார்க்கிறார்கள். வியாபாரி அவர்களுக்குத் தான் பணத்தை அள்ளி அள்ளிக் கொடுப்பான். இடையில் அம்பலவாணர் குறுக்கிட்டு, "இங்கு எத்தனை சவுக்குக்காரர்கள் இருக்கிறார்கள்?" வியாசர்கள் மொத்தம் எத்தனை பேர்? "அடிமைகள் எத்தனை பேர்?" என்று கேட்டார்.

"இந்தச் சிறுதீவில் மட்டும் எண்ணூறு அடிமைகள் இருக்கின்றனர். சவுக்குக்காரர்கள் 57 பேரும், வியாபாரி அவன் மனைவி, மகள், தம்பி ஆகிய நான்கு பேரும் ஆக 61 பேர் வியாசர்கள் இருக்கிறார்கள்."

"61 பேருக்கு 800 பேர் அடிமையா? இந்த நிலை மாற வேண்டும்." என்று அம்பலவாணர் கூறினார்.

"உறுதியாக மாற்றித்தான் ஆகவேண்டும். அதற்கு அடிமைகளின் மனப்பான்மையைப் படிப்படியாக மாற்ற வேண்டும்" என்று வெள்ளிமலை கூறினான். சிந்தனையோடு மலைக்குடைவை யடைந்து உறங்கத் தொடங்கினார்கள்.

# 9. புலி வேட்டை

ஒரு நாள் அடிமை வியாபாரி தன் அரண்மனையில் உட்கார்ந்து கொண்டிருந்தான். அவன் தம்பி அங்கே வந்தான் "அண்ணா, நேற்றிரவு புலிகள் வந்து மூன்று அடிமைகளைக் கொனறு விட்டன" என்றான். அடிமை வியாபாரிக்குத் திடுக்கென்று தூக்கிப்போட்டது. மிகவும் வருத்தப்பட்டவனாகக் காணப்பட்டான். உண்மையில் அவர்கள் இறந்துவிட்டார்களே என்று துன்பமடைந்து மனம் வருந்தவில்லை. இருந்தால் விற்றுப் பணம் சேர்க்கலாமே என்றுதான் வருத்தமடைந்தான். அபபுறம் அண்ணனும் தமபியும் கூடிப் புலிகளை ஒழிப்பதற்கு என்ன வழியென்று யோசனை புரிந்தார்கள். கடைசியாகத் தம்பி ஒரு வழி சொன்னான். "அண்ணா, எல்லா அடிமைகளையும் கூட்டிக்கொண்டு காட்டிற்குள் செல்லுவோம். அவர்களுக்கு ஆளுக்கொரு கத்தி கொடுததுப் புலிகளுடன் சண்டையிடச் செய்வோம். இப்படியே எல்லாப் புலிகளையும் இரண்டு மூன்று நாட்களில் கொன்று விடலாம். இரண்டொரு அடிமைகள் தான் இறப்பார்கள். பிறகு யாருமே இறக்கமாட்டார்கள்" என்றான.

"தம்பி, அடிமைகளின் கையில் ஆயுதத்தைக் கொ[illegible]க்கலாமா? திருப்பிக் கொண்டு நம்மைத் தீட்டி விட்டா[illegible]ன்ன செய்வது?" என்று பயந்து கொண்டே வியாபாரி [illegible]ட்டான.

[illegible]தான் இல்லை. அடிமைகளுக்குப் புத்தி இலை யாது [illegible]றநதுபோன அடிமைகளின உடலைக் காட்டி

இந்த மாதிரி ஆபத்து பின்னுக்கு ஏற்படாமல் இருக்கவே புலிவேட்டைக்குப் போகிறோம் என்று சொல்வோம். அவர்கள் நன்மையாக இருப்பதால் புலிவேட்டையைத் தீவிரமாக நடத்துவார்கள்'' என்று கூறினான்.

வியாபாரியும் இதை ஒப்புக்கொண்டான். சரியென்று ஆயுதசாலையில் போய்க் கத்தி எடுத்துக் கொண்டு வந்து மாளிகை வாயிலில் நிரப்பும்படி சவுக்குக்காரர்களுக்கு ஆணையிட்டான் மொத்தம் 300கத்திகள் தான் இருந்தன. அந்தக் காலத்தில் கத்திதான் ஆளைக்கொல்லும் பெரிய ஆயுதம். அத்தனை கத்திகளையும் சரிபார்த்து அங்கே வைத்துக் கொண்டான வியாபாரி.

அம்பலவாணரும் வெள்ளிமலையும் காலையில் எழுந்து வந்து வழக்கம்போல் வேலைசெய்து கொண்டிருந்தார்கள். திடீரென்று பகல் நேரத்தில் வேலையை நிறுத்தும்படி சவுக்குக்காரன் ஆணையிட்டான் எல்லா அடிமைகளையும் வியாபாரி மனையின முன் நடத்திக் கொண்டு வந்து நிறுத்தினான். பிறகு நல்ல பலாட்டியர்களாக 300 பேரைத் தேர்ந்தெடுத்து ஆளுக்கொரு கத்தியைக் கொடுத்தான். இதை எதற்காகக் கொடுக்கிறான் என்று யாருக்கும் தெரியவில்லை. அந்தத் தீவிற்கு வந்தது முதல் ஆயுதமே பிடித்தறியாத அவர்கள அந்தப் பளபளக்கும் கத்திகளைப் பார்த்ததும். அவற்றைத் தாங்களே பயன்படுத்தப் போகிறோம என்பதை நினைத்ததும் சிறிது மகிழ்ச்சி கொண்டனர்.

வியாபாரியின் தம்பி அவர்கள் முன்வந்து ''அடிமைகளே! புலிகள் அடிக்கடி உங்களை வந்து கொல்கின்றன. அவற்றைத் தடுக்க வேண்டும். ஆகையால் இன்று நீங்கள் காட்டுக்குள் சென்று வேட்டையாடி, ஒரு புலி கூட இல்லாதபடி எல்லாவற்றையும் கொன்றுவிட்டுத் தான் திரும்பவேண்டும்'' என்று பேசினான். ''புலிவேட்டை'' என்றதும் அடிமைகளின் முகம் குப்பென்று வியர்த்தது. ஆனால் வியாபாரி சொல்வதை மறுத்தால் சவுக்கடிதான் கிடைக்கும் என்ற பயம் புலியை எதிர்க்கும் ஊக்கத்தைக் கொடுத்தது. ஒருவராவது கையிலிருக்கும் கத்தியின் முன் வியாபாரி ஒரு சிறு நரிதான் என்பதை நினைத்துக் கூடப் பார்க்கவில்லை. ''மனிதனாகப் பிறந்தும் அடிமைக

ளாயிருக்க நேர்ந்த இந்தக் காட்சியைக்கண்டு வெள்ளிமலையும் அம்பலவாணரும் உருகினார்கள். ஆனால் அம்பலவாணருக்கு உள்ளுக்குள் ஒரு மகிழ்ச்சி! புலிவேட்டை வெற்றி பெற்றால் அடிமைத்தனம தூளாவதற்கு ஒரு வழி பிறக்குமென்று எண்ணினார். வெள்ளிமலையும், அம்பலவாணரும்கூடக் கத்தி வாங்கிய வீரர்களிலே சேர்ந்தவர்களாக இருந்தனர்.

வியாபாரியின் தம்பி எல்லோரையும் காட்டுக்குள் நடத்திச் சென்றான். சவுக்குக்காரர்கள் அடிமைகளின் பின்னால் நடந்து வந்து கொண்டிருந்தனர்.

அவர்கள் இட்ட ஆணைபபடி அடிமைகள் காட்டின் ஒவ்வொரு புதரையும தேடிக் கலைத்துப் புலிகளை வெளியில் விரட்டினார்கள். ஒவ்வொரு புலியையும் கத்தியும் கையுமாக பத்துப் பதினைந்து பேர் சூழ்ந்து கொண்டு நிற்கும பொழுது அது என்ன செயயமுடியும்? ஒரு முறை அமபலவாணர் மட்டும் தனியாக ஒரு புலியிடம் அகப்பட்டுக்கொண்டார். அது அவரைப் பற்றுமுன் அவர் அதன வாயைப பிடித்துப் பிளந்து அதற்குள் கத்தியைச் செலுத்தினார். புலி திமிறிப் பார்த்தது. அதற்குள் வெளளிமலை வந்து விட்டான். இரண்டுபேரும் சேர்ந்து அதைக கொன்றார்கள். அடிமைகளின் இந்த வீரச் செயலைக் கண்டு மரங்களின் மேல் உட்கார்ந்திருந்த வியாசர்கள் ஆச்சரியப்பட்டனர். இத்தனை வீரமுடைய அடிமைகள், தங்களுக்குக் கடங்கி நடப்பதும் அவர்களுக்கு வியப்பாகவே இருந்தது. 'காலம் மாறும்' எனபதை அறியாத அந்த வியாசர்கள் புலிவேட்டை முடிந்த பிறகு மரத்தை விட்டு இறங்கிவந்து அடிமைகளை ஊர்நோக்கி நடத்திச் சென்றார்கள். ஊர் வந்தவுடனேயே ஒவ்வொரு அடிமையிடமும இருந்த கத்திகள் பறித்துக்கொள்ளப்பட்டன.

புலிவேட்டையில் ஏழெட்டு அடிமைகளுக்கும் அம்பலவாணருக்கும் சிறு சிறு காயங்கள் ஏற்பட்டனவே தவிர வேறு ஆள் சேதமில்லை. இதனால் வியாபாரிக்கிருந்த ஒரு கவலை ஒழிந்தது. அவனுக்கு மகிழ்ச்சி பெருகியது. ஆனால் அடிமைகளுக்கு அதில் ஒருவிதநன்மையும் இல்லை. மறுபடியும் அவர்கள் வழக்கம்போல் உழைக்க நேரிட்டது.

# 10. குற்றவாளிகள்

புலி வேட்டை நடந்ததற்கு அடுத்த நாள் பகலில் எல்லா அடிமைகளும் கூழ் குடிக்கும்பொழுது அம்பலவாணர் எழுந்திருந்தார். "தோழர்களே, அடிமைகளாக இருக்கும் என் நண்பர்களே" என்று இரைந்து பேசினர். எல்லா அடிமைகளும அம்பலவாணரை நிமிர்ந்து பார்த்தார்கள். அதற்குள சவுக்குக்காரன் வந்து சவுக்கை ஓங்கினன். சட்டென்று யாரோ ஒருவன் சவுக்கின் நுனியைப் பிடித்துக் கொண்டான். அம்பலவாணர் பேசத் தொடங்கினர். "நேற்று புலிவேட்டையாடினேம. புலிக்கும் அஞ்சாமல் போர் புரிந்த எண்ணூறு பேர் நம்மைவிடப் பலம் குறைந்த அறுபத்தொரு மனிதர்களுக்கு அடங்கி நடக்கிறேம். ஏனென்று நினைத்தீர்களா? நாம் ஒருவரோடு ஒருவர் கலந்து பேசுவதில்லை. மனைவியைப் பார்க்கக் கூட முடியவில்லை. இவ்வளவுக்கும் காரணம் நாம் சவுக்குக்கும் கத்திக்கும் பயந்து கொண்டிருந்தது தான். நேற்றுப் புறப்படும் பொழுது புலிவேட்டை என்றதும் நடுங்கினேம். ஆனல் கூட்டமாகப் போனதால் புலிகளை அஞ்சாமல் கொன்று வந்தோம். புலிக்குப் பயந்த மனிதர்கள் நம்மை எலிக்குஞ்சுகள் போல் அடக்கி ஆளுகிறார்கள். அவர்களுடைய கத்தியும் சவுக்கும் நம்மைப் பயமுறுத்துகின்றன. கத்தி போன்ற பல்லும், சவுக்கு போன்ற வாலும் உடைய கொடிய புலியையே கொன்றேமே நமக்கு இவர்களைக் கொல்ல எந்நேரம் செல்லும். நாம் எண்ணூறு பேர் கடல்போல் இருக்கிறேம். அவர்கள் அறுபது பேடிதான், நம்மால் அவர்களைக் கொல்ல முடியாதா? அப்பர்

யானுல் ஏன் இத்தனை நாளும் அவர்கள் ஆட்டியபடி ஆடி வந்தோம்? நாம இதைப் பற்றி நினைத்தே பார்க்கவில்லை. ஒரு பேச்சுக்கூடப் பேசவில்லை. ஆடு மாடுகளைப் போல் வாயற்ற பிராணிகளாய் இருந்தோம. மனிதனுகப் பிறந்தது அடி வாங்கிப் பயந்து உழைத்துச் 'சாவதற்காகவா? சிந்தித்துப் பாருங்கள்'' என்று பேசி முடித்தார். இதற்குள் அங்கிருந்த சவுக்தக்காரன் சவுக்கை விட்டு விட்டு வியாபாரியின் அரண்மனைக்கு வேக வேகமாக ஓடிஞன். வியாபாரியிடம் ''அடிமைகள் விழித்துக் கொண்டார்கள்'' என்று கூறிஞன். அந்த அறிவில்லாத வியாபாரி, ''இவ்வளவு நேரம் ஏன் தூங்கவிட்டாய்?'' என்று கோபமாகக் கேட்டான். ''அதைச் சொல்லவில்லை ஐயா, புத்துணர்வு பெறுகிருர்கள். புதிதாக வந்த அடிமை அவர்களைக் கிளர்ச்சி செய்யத் தூண்டிவிடுகிருன்'' என்ருன். ''அவனைக் கைது செய்துபட்டினி மண்டபத்தில் அடை'' என்ருன். ''என்ஞல் போகமுடியாது பயமாக இருக்கிறது'' என்று அவன் மறுத்து விட்டான். ''சரி அந்த நான்கு பெரிய அடிமைகளைக் கூப்பிடு'' என்ருன். அவன் வெளியில் ஓடிஞன். அம்பலவாணரையும் வேலநாதனையும் கடற்கரையிலிருந்து வியாபாரியிடம் கூட்டி வந்த அந்தப் ''பெரிய அடிமைகள்'' நான்குபேரும் வந்தார்கள். ''அந்தப் புதிய அடிமையைப் பட்டினி மண்டபத்தில் போட்டு அடையுங்கள்'' என்று வியாபாரி கூவிஞன். ''அப்படியே'' என்று கூறிவிட்டு அவர்கள் திரும்பிஞர்கள். வேலை செய்து கொண்டிருந்த அம்பலவாணரைப் பிடித்து இழுத்து வந்து பட்டினி மண்டபத்திற்குள் பூட்டிஞர்கள். அதே சமயம் வேலநாதனையும் ஒரு சவுக்குக்காரன் இழுத்துக் கொண்டு வந்து பட்டினி மண்டபத்திற்குள் தள்ளிஞன். அவனை ஏன் இங்கு கொண்டுவந்து தள்ளுகிருர்கள்?

பாப்பாத்திக்கு வேலநாதனைத் துன்புறுத்தி விளையாடுவதில் விருப்பம் அதிகமல்லவா? ஒருநாள் அவளுக்கு அவனைத் தண்ணீரில் போட்டுப் பார்க்க வேண்டுமென்று ஆசை உண்டாகி விட்டது. அரண்மனையில் இருந்த தொட்டியைவிட வேலநாதன் பெரியவனுக இருந்தான். ஆகவே அவனைக் குளத்தில் போட்டுப் பார்க்கவேண்டு

மென்று அரண்மனைத் தோட்டத்திற்குக் கூட்டிக் கொண்டு போனாள். கரைக்குப் போனதும் வேலநாதனைச் 'சடக்' கென்று குளத்திற்குள் தள்ளி விட்டாள். நீந்தத் தெரிந்த வேலநாதன் குளத்திற்குள் நீந்திச் சென்று அக்கரை ஏறினான். அவன் நீந்திக்கொண்டு போனது கடலில் படகு மிதப்பது போல் அழகாக இருந்தது. தானும் அப்படி மிதக்க வேண்டும் என்று பாப்பாத்திக்கு ஆசையாக இருந்தது. ஆனால் அவளுக்கு நீந்தத் தெரியாது. தன்னைத் தூக்கிக் கொண்டு நீந்தும்படி வேலநாதனைத் தொந்தரவு செய்தாள். சரி என்று வேலநாதன அவளை முதுகில் தொத்திக் கொள்ளச் சொல்லிவிட்டுக் குளத்திற்குள் நீந்திக் கொண்டிருந்தான். குளத்தின் நடுவில் நீந்திக் கொண்டிருக்கும்பொழுது சவுக்குக்காரன் ஒருவன் அந்தப் பாதையாக வந்தான. அவன் இதைப் பார்த்துவிட்டான். வியாபாரியின் மகளைக் கொல்லத் தான் இந்தப் பயல் வேலை செய்கிறுனென்று அவன் நினைத்துவிட்டான். "டே, சிற்றடிமை" என்று ஒரு அரட்டு அரட்டினான். பயந்துபோன வேலநாதன் கையிரண்டையும் தலைக்குமேல் குவித்தபடி திரும்பிப் பார்த்தான். பாப்பாத்தி தவறிக் குளத்தில் விழுந்து விட்டாள். அவளைத் தூக்குவதற்காக வேலநாதன் இரண்டு மூன்று முறை தண்ணீருக்குள் மூழ்கி முயற்சித்தும் முடியவில்லை. அவன் கைகள் வேறு சோர்ந்து விட்டன. கடைசியாகப் பயத்துடன் கரையேறினான். சவுக்குக்காரன் பாப்பாத்தியைத் தூக்கிக் கரையேற்றிவிட்டு அவனை வியாபாரியிடம் அழைத்துச் சென்று நடந்ததைச் சொன்னான். வியாபாரிக்கு வந்த கோபம் இவ்வளவு அவ்வளவென்று சொல்ல முடியாது. "பட்டினி மண்டபத்தில் அடை" என்று கூவினான். அதன் பயனாக வேலநாதனும் பட்டினி மண்டபத்திற்குள் அடைக்கப்பட்டான.

# 11. புரட்சி

இதற்குப் பிறகு வியாபாரியும் அவன் தம்பியும் கலந்து ஆலோசித்தார்கள். "தம்பீ! இனி நம் வியாபாரம் நடக்காது போல் இருக்கிறதே. இப்படியாகி விட்டதே! என்ன செய்வது?" என்று கேட்டான் வியாபாரி.

"அண்ணா, அந்த அடிமைகள் இரண்டு பேரையும் அப்பனையும் மகனையும் ஒன்றாகத் தீயில் இட்டு அடிமைகளுக்கு எதிரிலேயே பொசுக்கி விட்டால் பயந்து மேற்கொண்டு ஒன்றும் செய்யாமல் இருந்து விடுவார்கள்" என்று யோசனை சொன்னான் தம்பி.

"தம்பீ! இரண்டு அடிமைகள் விற்றால் ஆயிரம் பொன் கிடைக்குமே!" என்று இழுத்தான் வியாபாரி.

"அண்ணா, இந்த இரண்டு அடிமைகளும் உயர்ந்த பதவியில் இருந்தவர்கள்; அதனால் அவர்களுக்கு விடுதலை எண்ணம் தோன்றுவது இயற்கை; உரிமைக்காக உயிர்போனாலும் கவலைப்பட மாட்டார்கள். அவர்களை விட்டு வைத்தால் நமக்கு ஒரு அடிமைகூட மிஞ்சமாட்டான். இவர்கள் இரண்டுபேர் தான் செத்தால் பாதகமில்லை. ஆனால் அவர்களைப் பொசுக்குவதன் மூலம் மற்றவர்களை நிரந்தர அடிமைகளாக்கி விடலாம" என்று தம்பி விளக்கினான்.

"சரி, வருகிற வெள்ளிக்கிழமை அவர்களைப் பொசுக்க ஏற்பாடு செய்!" என்று வியாபாரி கூறினான்.

இவர்கள் பேசிக் கொண்டிருந்ததைத் அப்பொழுது அங்கே வந்த 'பெரிய அடிமை' ஒருவன் கேட்டுக் கொண்

டிருந்தான். பேசாமல் வந்தவழியிலேயே திரும்பிப் போய் மற்ற மூன்று முரட்டு ஆசாமிகளிடமும் நடந்ததைச் சொன்னான். அப்பொழுது தான் அவர்களுக்கு உணர்ச்சி வந்தது அதுவரை மற்ற அடிமைகளை அடக்குகிறோம் என்ற மதிப்பில் வியாபாரி இட்ட ஆணையைச் செய்து வந்தார்கள். இப்பொழுது அவன் அடிமைகளை ஏமாற்றி வருவதைத் தெளிவாக உணர்ந்து கொண்டார்கள். இதிலிருந்து தப்பவேண்டும், அடிமை வாழ்வு நீங்கவேண்டும் என்றும் அவர்களுக்கு ஆசை யுண்டாகியது. இதுவரை தங்களைப் போனற வீர உழைப்பாளிகளைக் கோழை வியாசர்களுக்கு அடக்கித் தாங்கள் அநியாயம் செய்து வந்ததை நினைக்க நினைக்க அவர்களுக்கு வருத்தமாக இருந்தது. அன்று இரவு நான்கு பேரும் பட்டினி மண்டபத்திற்குப் போய் அம்பலவாணரிடம் நடந்ததைக் கூறி விட்டுத் தீ மூட்டும் பொழுது தீயர்களான வியாசர்களையே தீயில் தள்ளி விடுவதாகவும் அதுவரை விஷயத்தை வெளியில் விட வேண்டா மென்றும், அதுவரை தினமும் இரவில் கூழ் கொண்டு வந்து தருவதாகவும் கூறிவிட்டுப் போனார்கள். வெள்ளிமலையிடமும் இதைக் கலந்தாலோசிக்கும்படி அம்பலவாணர் கேட்டுக் கொண்டார். அதன்படி வெள்ளிமலையின் மலைக்குடைவுக்குப் போனார்கள். அங்கே நானூறு ஆண் அடிமைகளும் உட்கார்ந்திருந்தார்கள். முதலில் இந்த நான்கு பேரையும் தூரத்தில் கண்டதும், "துரோகிகளே! திரும்பிப் போங்கள்" என்று கூவினார்கள். கற்களை எடுத்து விட்டெறிந்தார்கள். ஆனால் அவர்கள் நால்வரும் அவற்றைப் பொறுத்துக கொண்டு "நாங்களும் உங்கள் ஆட்களே" என்று கூவியபடி கூட்டத்தின் நடுவில் புகுந்தார்கள். வெள்ளிமலையோடு சிறிது நேரம் பேசினார்கள். பிறகு, வியாபாரியின் திட்டத்தையும் அதுவரை அடிமைகள் இருக்கவேண்டிய முறையையும் சொன்னார்கள். பிறகு கூட்டம் கலைந்தது.

அதற்குப் பிறகு இரண்டு மூன்று நாட்கள் எல்லா அடிமைகளும் வழக்கம் போல் வேலைசெய்து வந்தார்கள். ஆனால் அவர்கள் முகத்தில் ஒரு மகிழ்ச்சியிருப்பதன் காரணம் கொஞ்சங் கூடச் சவுக்குக்கார வியாசர்களுக்குப் புரியவில்லை.

வெள்ளிக்கிழமை வந்தது. காலையில் எல்லா அடிமைகளும் வேலை செய்யத் தொடங்கினார்கள். திடீரென்று மணியடித்தது. சவுக்குக்காரர்கள் அங்கே இருந்த அடிமைகளை எல்லாம் நடத்திக் கொண்டு வந்து பட்டினி மண்டபத்திற் கெதிரில் நிற்க வைத்தார்கள். அரண்மனையிலும் வயல்களிலும் வேலை செய்து கொண்டிருந்த பெண்ணடிமைகளும் அங்கே கொண்டுவரப்பட்டார்கள். வியாபாரியும் அவன் குடும்பத்தாரும் சவுக்குக்காரர்களும் அவர்கள் மனைவி மக்களும் ஒரு பக்கம் வேடிக்கை பார்க்க வந்து கூடியிருந்தார்கள். நடுவில் ஒரு பள்ளம் வெட்டி அதில் தீ எரிக்கப்பட்டிருந்தது. தீ அனல் விட்டு எரிந்து கொண்டிருந்தது. வியாபாரி எழுந்திருந்தான். அப்பொழுது அவன் தம்பி, அம்பலவாணரையும் வேலநாதனையும் இரண்டு கைகளாலும் பிடித்து இழுத்து வந்தான். நெருப்பின் முன் நிறுத்தினான். வியாபாரி பேசத் தொடங்கினான். "ஏ அடிமைகளே, இதுவரை நீங்கள் என்னை எதிர்க்காமல் அடங்கி நடந்ததால் பிழைத்தீர்கள். உங்கள் பிழைப்பைக் கெடுக்க இங்குவந்த இந்தப் புதிய அடிமை என்னை எதிர்த்தான். எதிர்த்தவர்கள் என்ன ஆவார்கள் என்பதைக் காட்டவே உங்களை இங்கே கொண்டுவந்தேன். ஏ, என் நான்கு பெரிய அடிமைகளே, இந்த அடிமையையும் சிற்றடிமையையும் தீயிட்டுப் பொசுக்குங்கள்" என்று ஏவினான். உடனே அந்த நான்கு பெரிய அடிமைகளும் ஓடிவந்து அந்த வியாபாரியையும் அவன் தம்பியையும் தூக்கித் தீயில் விட்டெறிந்தார்கள். 'ஓ ஓ' வென்றலறியபடி அவர்கள் வெந்து செத்தார்கள். அந்தவியாபாரியின்மகள் பாப்பாத்தியும், 'அப்பா அப்பா' என்று கத்திக்கொண்டு ஓடிவந்து தீயில் விழுந்து செத்தாள். அவன் மனைவியும் அவன் தம்பி மனைவியும் "இனி நாங்கள் இருந்தென்ன?" என்று கதறியபடி தீயில் விழுந்து உயிரை விட்டார்கள். சவுக்குக்காரர்கள் சவுக்கைச் சுழற்றியபடி அடிமைகளை அடித்துக்கொண்டிருந்தார்கள். அடிமைகள் 'புரட்சி புரட்சி' என்று கூவியபடி சவுக்குக்காரர்களை எல்லாம் குண்டுக் கட்டாகக் கட்டிக்கொண்டு வந்தார்கள். அவர்களையும் பொசுக்க வேண்டும் என்றார்கள். அம்பலவாணர் தடுத்து, "அவர்கள் இருக்கட்

டும். அடிமைகளின் விடுதலை வாழ்க்கையைக் கண்டு இருந்தட்டும்'' என்றார். சரி என்று அவர்களை எச்சரித்து அனுப்பினார்கள். அவர்கள் தம் மனைவி மக்களைக் கூட்டிக்கொண்டு தப்பித்தோம் பிழைத்தோமென்று ஓடினார்கள். இதையெல்லாம் பார்த்த பெண்ணடிமைகள் ஏதோ அதிசயம் நடக்கிறதென்று திகைத்துப் போயிருந்தார்கள்.

அவ்வளவும் அமைதியடைந்த பிறகு, அடிமைகள் எல்லோரும் அம்பலவாணரைச் சூழ்ந்து கொண்டு "இனி நாங்கள் என்ன செய்ய வேண்டும்?'' என்று கேட்டார்கள்.

"நாளைக்குப் பேசிக்கொள்வோம்'' என்று சொல்லிவிட்டு அம்பலவாணர், வேலநாதன், வெள்ளிமலை, அந்த நான்கு முரடர்கள் எல்லோரும் அரண்மனைக்குப் போனார்கள். அங்குள்ள எல்லாப் பொருள்களையும் ஆராய்ந்தார்கள்.



# 12. விடுதலை விடுதலை

அடுத்த நாள் காலையில் மக்கள் அனைவரும் அரண்மனை வாயிலில் கூடிவிட்டனர். அம்பலவாணரும் மற்றவர்களும் வெளியில் வந்தனர். எல்லா மக்களும் "இனி எங்களுக்கு என்ன வேலை?" என்று கேட்டார்கள். அம்பலவாணருக்குச் சிரிப்பு வந்து விட்டது. நாள் முழுதும் உழைத்திருந்தவர்களால் சும்மாயிருக்க முடியுமா? அவர்கள் நிலையை அவர் புரிந்து கொண்டார். "சரி, இப்பொழுது வேலை தருகிறேன்." என்று சொல்லிவிட்டு "ஆண் மக்கள் அனைவரும் புதுப்புது வீடுகளாகக் கட்டவேண்டும். பெண்மக்கள் எல்லோரும் வயலில் உழ வேண்டும்" என்று சொன்னார். ஆணடிமைகளுக்கு வீடு கட்டவேண்டிய வகைகளை எல்லாம் எடுத்துச் சொன்னார். அதுவரை அங்கே விளைந்த ஒருவகைத் தானியம் கூழ் காய்ச்சத்தான் பயன்பட்டு வந்தது. அந்தக் கூழும் வாய்க்கு ருசியாக இருப்பதில்லை. இப்பொழுது அரண்மனைக்குள் இருந்த விதை நெல்லை எடுத்து வயல்களெங்கும் விதைக்கும்படி கூறினார். பெண்களுக்கு வருட முழுவதும் உழவும் நாற்று நடவும், தண்ணீர் பாய்ச்சவும், கதிரடிக்கவும் வேலை சரியாக இருந்தது. ஆண்கள் நான்கு மாதத்தில் நானூறு அழகான வீடுகளைக் கட்டி விட்டார்கள். அங்கே மனைவி மக்களுடன் வசிக்கத் தொடங்கினர்கள். அதற்குப் பிறகு "என்ன வேலை?" என்று கேட்டார்கள். ஊர் முழுவதும் கல் பதித்துத் தெருவைக் கல்லாலேயே அமைக்க வழி சொன்னர். ஒரு மாதத்தில் அதுவும் முடிந்து விட்டது.

பிறகு "என்ன வேலை இருக்கிறது?" என்று கேட்டார் கள். ஒரு பெரிய கட்டடம் கட்டச் சொன்னார். அது வும் மூன்று மாதத்தில் கட்டி விட்டார்கள். பிறகு "என்ன வேலை இருக்கிறது?" என்று கேட்டார்கள். ஓலைகள் கொண்டுவரச் சொல்லி அதில் எழுதப்படிக்கக் கற்றுக் கொடுத்தார். அப்பொழுது, அம்பலவாணரை முன் கூட்டிவந்த படகோட்டி ஐந்து தமிழ்ப் பண்டிதர் களைக் கொண்டுவந்து இறக்கினான். பணத்திற்குப் பதில் உதைவாங்கிக் கொண்டு திரும்பினான். தமிழ்ப் பண்டி தர்களை வைத்துப் பெரிய நூல்களை எல்லாம் சொல் லிக் கொடுத்தார். ஒரு ஆண்டில் எல்லோரும் நன்றாக எழுதப் படிக்கக் கற்றுக் கொண்டார்கள். பிறகு சில ருக்குப் படிக்கப் பிடிக்கவில்லை. "வேறு வேலை என்ன இருக்கிறது?" என்று கேட்டார்கள். படித்துக்கொண் டிருந்தவர்களுக்கு விளையாடக் கற்றுக்கொடுக்க ஏற் பாடு செய்தார். பல தொழிலும் பயிற்று வித்தார். "வேறு வேலை என்ன இருக்கிறது?" என்று கேட்ட வர்களை ஒரு பெரிய கப்பல் கட்டச் சொன்னார். மூன்று மாதங்களில் ஒரு பெரிய பாய்மரக் கப்பல் ஒன்று கட்டி முடித்தார்கள். ஒரு நாள் அதில் அம்பலவாணர் வேலநாதன், வெள்ளிமலை மூன்று பேரும் ஏறிக் கொண்டார்கள். அரண்மனையில் கண்டெடுத்த 'பூகோ ளப் படமும்,' 'கடல் வழிகாட்டும்' படமும் அம்பல வாணர் கையில் இருந்தன. அந்த நான்கு பெரியவர் களையும் அழைத்து "நீங்கள் இந்த நாட்டைப் பார்த் துக் கொள்ளுங்கள் நாங்கள். எங்கள் நாடு போய்வரு கிறோம்" என்று அம்பலவாணர் கூறினார். "மீண்டும் எப்பொழுது சந்திப்பது?" என்று பிரியமாட்டாமல், அவர்கள் கேட்டனர், "அடிக்கடி இங்கு வருவோம்!" என்று வெள்ளிமலை உறுதியளித்தான். அவர்கள் பிரி வுத் துன்பத்துடன் கீழே இறங்கினார்கள். கப்பல் கட

லுக்குள் நகர்ந்தது. அந்த விடுதலைத் தீவின் மக்க
"எங்களுக்கென்ன வேலை?" என்று கேட்டார்க
"உங்கள் தீவை நீங்களே ஆளுங்கள்!" என்று
பலவாணர் கூறினார் வேலநாதன் 'விடுதலை விடுத
என்று பாடினான். களிப்புடன் இருந்த அவர்க
பாய்மரக் கப்பல் கடலில் மிதந்து சோழந
நோக்கிப் போய்க்கொண்டிருந்தது.



